விதிவழிச்சிவனைச் சிவபரம்பரையை விரும்பிநற்பதிட்டைசெய் தவிரசெங், கதிர்முதற்சண்ட வரைப்பரிவாரக் கடவுளர்க்குறையுள் சூழ்கண்டு, புதியதேர்விழாக்கொண் மூர்த்தியும்வகுத்துப் பொன் முடிமணிக்குழையார, நிதிவனையாதி பலபணியுதவி நித்தநைமித்தி கநடத்தா. (எச)

காதிகாதலன்முன் றருகடவிதெனுங் காட்சியதொருபெருங்குள ங்கண், டேதமிலசாலி விளைநிலம்பிறவு மியறறியாப்புடையநாதர்க் கு, நீதிநூலறிவின் மறையவர்தமக்கு நேர்பகிர்நதளிததனன்சிவன, தாதிகாரணப்பேர் தழுவியநகரு மாப்பனூராயினதன்றே. (எரு)

பூழியனேராண் டிருந்துழியொருநாட் புரிசைசூழ்மதுரையம்பதி யி, லூழியிறெருவன் றுணிவனந்தெழுந்தங் கொல்லைபோயாப்ப னூருடையார், வாழியகுரவங் கமழகுழலுமையாண் மலரடியஞ்ச லிதநேத்தி, யாழியவன்பி ஞற்பிரிவாற்று தயர்ந்துநின்றனுமதிபெ ற்றே. (எசு)

வேறு

அன்படைமனத்தின னரன்றளிகடந்து
வன்படையெயிற்சிசெறி வார்முரசியம்பத்
தன்படைமுதற்றலைவர் தானைகுழுமிக்கார்
மின்படைநெருங்கமிசை வெண்குடைவிளங்க. (எஎ)

பூமுகமடந்தையர்த னம்புடைகுலுங்கச்
சாமரைபணிப்பவரு தண்பவனநிம்பத்
தேமலர்மணத்திறெடு திணைசிகரமென்றேட்
காமருதமிழ்ப்பொதிய வாரநறைகால. (எஅ)

மாறுபடுசெம்பியர் மடந்தையர்படீரச்
சேறுபடுகொங்கைகர மென்பனசிவப்ப
வூறுபடுகொண்கரு திரங்கொடுசிவக்கும்
வீறுபடுசெங்கைவடி வாள்புடையின்மின்ன. (எகூ)

அன்னநடைவஞ்சியர்க ணீலமலரக்கா
லுன்னதநெடுங்குடையி னென்றுதவிரண்ணேழ
மன்னர்கரபங்கய மலர்க்குலமுகிழ்ப்ப
மின்னவிர்மதிக்குலநல் வேந்தெனல்விளங்க. (அ0)

வஞ்சிடையிடைப்படு சயம்புமகிழ்தானம்
புகுந்துதொழுதன்பொடு மிருந்திணிதுபோவா

ளிகந்துதனகர்க்குவரு மிந்திரனிலின்ப
மகந்தரநிறைந்தமுது ராபுரியடைந்தான். (அக)

மண்ணுமணியன்னதிரு வீதிவலமாவந்
துண்ணிலவுகோபுரம் வணங்கியுளணைந்தே
வண்ணநிறைபொற்கமல வாவியிடைமூழ்கி
யெண்ணுமொருசித்திமத வேழமுனிறைஞ்சா. (அஉ)

தடம்படிகயற்கணுமை யைத்தொழுதுசார்ந்து
படம்படிசுமக்கநிமிர் பாம்பணிபுராணக்
கடம்படிமுளைத்தமுதல் கான்மலர்வணங்கி
யுடம்படிதொடுத்துமன மொத்துருகிநின்றான் (அங)

நின்றுதுதிசெய்துதிரு நீற்றொளிபழுத்த
குன்றுபுரையண்ணல்விடை கொண்டுமடநல்லார்
மன்றுழனிமங்கல மெடுத்தெதிர்வரப்போ
யென்றுமுளகோயிலு ளணைந்தினிதிருந்தான். (அச)

சந்ததமுமீசனிரு தாண்மலர்சிரங்கொண்
டந்திபகல்மன்னுயிர் தமக்கருளகங்கொண்
டுய்ந்தறமுளைக்குமொரு கோலுயர்கரங்கொண்
டிந்திரனின்மிக்கரசி யற்றிவருநாளில். (அரு)

அங்கணர்சிவந்தசடை யாப்புடையநாதர்
தங்கருணையானது தனித்துருவமைந்த
திங்கிதுகொலென்னவொரு புத்திரனையீன்றான்
றிங்களினிளங்குழவி யென்றுலகுசெப்ப. (அசு)

உற்பவமகிழ்ச்சிவினை செய்துலகுவப்பச்
சொற்புனையுநாமகர ணஞ்சுகுணனென்றே
பொற்பவணிவித்தகலை யைந்தின்மதிபுல்கும்
பற்பலகலைத்தொகுதி கற்பனபயிற்றா. (அஎ)

வாள்வினையுமுற்றிமத மாக்கவனமாவூ
ராள்வினையுமுற்றிய தறிந்தவனிதாங்குந்
தோள்வினைகுறித்துரிய தொன்முறைமைநல்கு
நாள்வினையியற்றிமணி நன்முடிகவித்தான். (அஅ)

பின்னரிகபோகநனி துய்த்தொழிவுபெற்றுத்
தென்னவன்விரத்தியொடு சித்தமசைவற்றுத்
தன்னையுணர்தத்துவ வுணர்ச்சிதலைநின்றே
மன்னுதிருவாப்புடைய வள்ளலைநினைந்தான். (அகூ)

தார்புருதடம்புயன் விரைந்தருடைமழைக்குஞ்
சீர்புருகயறகனுமை சேருமதுரேச
னோர்புகுபதந்தொழு தெழுந்தருளியாப்ப
னூர்புகநடந்துநிறை யன்பொடவனுற்றான் (௬0)

கன்னிகுரவங்கமழ் குழற்கவுரிபாக
மன்னிநிறையாப்புடைய வள்ளறிருமுன்னர்
சென்னிமிசையஞ்சலி திருத்துபுநடந்தே
வன்னியிழுதொத்துருகி மண்ணிடைபணிந்தான். (௬௧)

வேறு.

உடல்குழைந்துருகமேனி யுரோமங்கள்சிலிர்ப்பக்கண்ணீர்
மடைதிறந்தொழுகநெக்கு மனம்பதைபதைத்துளின்பந்
தடையறப்பெருகச்செந்நாத் தழுதழுப்படையவேந்த
னிடையறுவன்பினானின் றிவ்வகைதுதிப்பதானான் (௬௨)

காரணகடவுள்போற்றி கடல்வருமாலகால
பாரணப்பரமபோற்றி பராபரயோகிபோற்றி
பூரணசசுடரேபோற்றி புண்ணியபுராணபோற்றி
யாரணப்பொருளேபோற்றி யாப்பனூருடையாய்போற்றி. (௬௩)

திரிபுரவிசயபோற்றி தேவர்கடேவபோற்றி
பரிபுரவேதநாத பஙகயததரசேபோற்றி
யெரிபுரமதனுககாவி யிரதியாலளிததாய்போற்றி
யரிபுரந்தரற்குமெட்டா வாப்பனூருடையாய்போற்றி. (௬௪)

உலகெலாம்நிறைந்தாய்போற்றியொணடிறல்படைததவெஙகோன்
மலருளோன் * சாபமன்றி மற்றொருசாபமேரு
நலனுலாம்புஜழக்கைவேழ நாதனைப்பயந்தாய்போறறி
யலகில்சோதியனேபோற்றி யாப்பனூருடையாயபோற்றி (௬௫)

சுடர்மழுப்படையாய்போறறி சுருதிசொன்னடையாய்போற்றி
படர்நதிச்சடையாய்போற்றி பாலனப்படை † யாய்போறறி
யிடர்மனத்தடையாய்போற்றி யிவர்ந்தவெள்விடையாய்போறறி
யடர்தலைத்தொடையாய்போற்றி யாப்பனூருடையாய்போற்றி ()

மாக்கடலாவநந்த வனமடைப்பள்ளிமாயோன்
மேக்குயர்விடைகோல்காந்தை விளங்குமர்ச்சகன்மென்மெல்லப்

* வெங்கோல் மலருளோன் - வெவ்விய புட்பபாணங்களையுடைய மன்மதன்.

† பாலனப்படை - விட்டுணு

போக்குயிர்ப்பொருநால்வேத புராணவாகமங்களாக
வாக்குமெம்மிறைவபோற்றி யாப்பனூருடையாய்போற்றி. (கூஎ)

வேட்டமதிளைக்குமென்னை மீட்டுயிரளித்துமுன்பு
காட்டகத்தறிவாய்வந்து காட்சிசெய்கருணைபோற்றி
நாட்டமூன்றுடையவெங்க ளையகபோற்றிபைவா
யாட்டரவணிந்தசோதி யாப்பனூருடையாய்போற்றி. (கூஅ)

என்னநின்றேத்தியீச னின்னருள்கைக்கொண்டேர்ந்தார்
மன்னனன்றப்பனூருள் வதிந்தனனுகவந்தத்
தென்னனின்றேத்துந்தெய்வத திருத்துதியரன்பொற்கோயின்
முன்னர்நின்றேத்துவோர்த முழுவினையொழிவர்மாதோ. (கூகூ)

வேண்டிமுன்றனையீர்த்தாட்கொள் விமலர்க்குசசிறந்தபூசை
தூண்டுதேர்விழாவுமுள்ளம் பெருங்களிதூங்கச்செய்தோ
ராண்டுறைந்தருளுநாள்வா யாப்பனூருடையவணை
னீணடபேரருளும்வேந்த னுயுளுநிரம்பிறறன்றே. (க00)

வேறு.

இடைப்பரியபெருங்கதிக ளொருமூன்றுங்கடந்துபோய்க ளொ வாணேமிப், படைக்கரியநிறத்தவற்கு நான்முகற்குமடைவரிய பத விமேவி, விடைக்கடவுள்சிவபுரத்தி னவனுருவினுடன்கலந்து வே றற்றொன்றாயத, துடைத்தவிருவினைச்சோழாந் தகமாறன்விளங்கி னன் றொன்னுண்மன்னே. (க0க)

வேறு

மேயவழுதியுயர்சோழாந்தகன்வீமெருவுகதையீதாஞ்சொலவோர், நேயமொடுசெவியின்வாய் மாந்தினர்நீடுபொருண்முழுது மாராய்ந்துளோர், தீயவினையொழிவாமே லாம்புகழுசேர்வர் குறைதவிர வேவாழ்ந்து, நீளாயுளிறுதியினுலாம்பதமாவ தண்டவரருள்கூர்ந்தரோ. (க0உ)

ஆப்பனூர்சசருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - கக்எ.

# இடவபுரச்சருக்கம்.

—:o:—

இக்காதையமுதப் பெருந்தாரைநனைவித்த விருகாதுளீர்
முக்காலுமுமையொப்ப தியரொன்றுமகிழ்வுற்ற முனிகுநனை
யக்காலமுனிவோ ரொழுந்தஞ்சலித்தேத்த வணியாப்பனூர்
மெய்க்காரணன்பெற்ற நகரீசனுங்காதை விண்டானரோ. (க)

சுடர்சூழ்நெடுவேணி மிசையிந்துவழிவந்த சோழாந்தகன்
கடலசூழதரும்பார் புரந்தீசனுடன்மேவு கதிசேர்ந்தபி
னடல்வாகைபுனைமீளி சுகுணப்பெயர்ப்பூழி யன்காமர்வெண்
குடைநீழலுலகின்க ணுயிர்வாழமுறைசெய்து கோலோச்சுநாள். ()

வீழுநிலத்தேவர் திரிகாலகருமத்தின் விலகாரதின்
மாறுதசெந்தீ வளர்தநெருக்கும்விண்மாரி வருவிப்பர்வன்
பாறுமெம்வேன்மன்னர் முதன்மூன்றுவருணததர் பல்கிப்பெறும்
பேறனதங்கன்மம் வழுவாதநெறிநிற்பர் பின்றூர்களால். (௩)

மாரிக்குவித்தன்ன மடமாதர்கற்போங்கி மல்கும்பெருந்
தூரிக்குமுதலான பைங்கூழ்நிலந்தான் சுரந்தேவளம்
பாரிக்குநாளும் பலததோடிருக்கும் பசுங்காவெலாம்
பூரிக்குநல்லா னினம்பால்மிகுந்தே பொழிந்தூறுமால. (௪)

தானந்தவங்கலவி மெஞ்ஞானமின்பந தழைத்தீறிலா
வானந்தபோகந் ததும்புந்தமிழ்ப்பாண்டி யணிநாடெலாம்
வானம்பெருஞ்சீ ரிரும்புந்தகைத்தாயிவ் வணணம்பனு
ஞானந்தவிர்நதேபல் லுயிர்வாழவந்நாளி லோராண்டரோ. (௫)

வேறு.

மருவுகோணிலைதிரியமாரி வறப்பவேரிவறந்துபோய்ப்
பெருகுகூவலுநீர்சுருங்குபு பேருயிர்த்தொகையெய்த்திடப்
பொருவிலானினமாதிநாத்தலை புற்றலைப்படலின்றியே
திரியநீர்விளைவிக்கிவந்தது சிறுவிலைப்படுநாளரோ (௬)

அந்தநாளணியாப்பனூர்வரு மந்தணாளர்களெண்ணியே
சந்தவான்மழையின்மையால்வரு தங்கள்பங்குநிலக்கணே
முந்தநீபெருத்திவித்தி முளைத்துவான்பயிராகமுன்
வந்தவாப்புடைநாதர்பங்குவயற்கணங்கவரருளினல். (௭)

உண்ணுமேரியின்மண்டொடுங்குழி யுள்ளடங்கியநீரினல்
வெண்ணிறச்சிறுநெற்பயிர்க்கொள வித்திநாடொறுமாப்பனூ
ரண்ணலார்திருமேனிதீண்டுமொ ராதிசைவன்வளர்க்குநாட [ல்.
புண்ணியப்பொருள்போல்வளர்ந்து பொலிந்துபைங்கதிர்விட்டதா

சின்னிலத்துறுசாலிபைங்கதிர் நீட்டல்கண்டுதிருந்துநூல்
மன்னர்முன்னவருன்னியுன்னி மனம்பொறாமலிவ்வேரிநீர்
துன்னுபாதியதன்றியேமுழு துஞ்சைவாகமவேதிய
னென்னவன்மைதனெற்பயிர்க்க ணிறைப்பதென்றுகுழாங்கொளா.

வீறுசேரங்கிலத்தினீடிய வெண்பருத்திகணீரிலா
தீறுகாண்குறயாமிருப்ப தெணிக்குளத்திருகூறிலோர்
கூறுநீர்நமதேயதற்கொரு கோதியாதுகண்வாயினுட்
சேறுகாணவிறைத்துநஙகுறை தீர்வமென்றுரைசெப்பினர். (கo)

அன்னசெய்தியறிந்தயர்ந்திடு மாதிசைவருளுத்தமன்
என்னசெய்வமிதற்கெனுநெடி தெண்ணியெண்ணிவருந்துவான்
சொன்னவிப்பிராபானடைந்து தொடர்ந்துபோவையுட்புகுந்
தின்னல்கூரவிரங்கிவாய்மொழி யின்னகூறினனுலரோ. (கக)

ஆதிநூலொருநாலுநூலுட னங்கநூன்முதலாகநூ
னீதிநூலுமறிந்துளீர்விளை நீள்பருத்தியவாவினும்
பாதிநீரதனுககிறைப்பது பன்னினீரெனலகேட்டன
னீதியாருமயுததமென்ப ரெவர்கருமின்னதிசைந்திரா. (கஉ)

அன்றியாப்புடைநாதனூர்திரு வமுதுசெய்வதனுக்கிவை
யின்றியேயமையாமையாலரு ளீரொனககொடிரந்தன
னன்றிலாதவர்நஞசுணத்தகு நாதர்தானமுதுணபரோ
வென்றசஙகதியாடிவன்மையி யம்பியொலலேயெழுந்தரோ. (கஙு)

வேறு

எண்ணீர்மையற்ற மறையோர்பருத்தி யிடையேகுளத்துளருகுந், தெணணீரிறைப்ப வதுகண்டுசிந்தை தெருமநதுநின்றுசெயலபோயக, கண்ணீரிறைதது முறையிட்டிரந்து கனையாதிசைவன்முடிமேல், விணணீர்முடித்த திருவாப்பனூரர்மெய்த தாணமுன்வீழநது மொழிவான். (கச)

தேவாதிதேவ கயிலாயவாண திரிசூலநாதமுறையோ
மாவாடுதொரு வனவிப்பிரேசர் வலியட்டசம்புமுறையோ
மேவார்புரங்க டணிபாழ்படுத்த விறலவாகைவீரமுறையோ [யோ
வாவாவிதென்கொன்மறையோர்செயதீமை யணியாப்பனூரமுறை

என்றென்றரற்றி மொழிகின்றசைவ னிதயகுறிப்பின்வழியாய், நின்றென்றுமன்பர் நினையுங்கருத்து நிறைவேற்றுமாதிமறைநூ, லன்றென்றுமற்றி தாமென்றுமுண்மை யறியாதினைப்பமுடிவி, லொன்றென்றுநின்றபொருணமூலலிங்க வுருநின்றும்வந்துபகர்வான் ()

வேறு.

இசையநந்தமை வழிபடும்வேதியவிவ்வூர்
நசையொழித்தியா மலைமகளுமையொடுநலஞ்சேர்
திசைவயிற்படர்ந் துளத்தினுக்கிசையிடஞ்செல்வேம்
வசையிலாதநின் குடிமைபமுதீயும்பின்வருதி. (கஎ)

தொழுகுலத்தில்வந் திழிகுலத்தியற்கையைத்தொடர்ந்து
பழுதியற்றிநீர் பருத்தியுட்பாய்ச்சியபதக
ரழுதரற்றநம் மாணையினுருமிறேடிதிக்கன்
மழையிறைப்பவூர் பாழுபமொய்ந்தெனவழங்க. (கஅ)

தேவதேவநங் கீலகநாயகதெரிந்த
மூவர்வானவ ரருந்தவர்யோகியர்முனிவ
ரேவருந்தொட ராவுனையெங்ஙனநதொடர்வே ன்
றூவியன்னமன் றெளொடும்போம்வழிதுருவி. (கக)

என்றுகூறலு மிறையுளமகிழ்நதியாமேருந்
துன்றுநீணெறி யிடதஇனம்விடையடிச்சுவடும்
பொன்ருெடுத்தன கொன்றைநாண்மலருமுன்பொருந்துந்
தென்றமிழ்தஇரு நாட்டிணிக்குறிவழிசேறி. (உ௦)

எனவுரைத்தணி யாப்பனூர்த்திருவுருவிலிங்கந்
தனைமறைதலை யாளோடுஞ்சேயொடுந்தாவுந்
துணைவிடைப்பரி மேற்கொடுநடந்தனன்சுருதி
முனைவனுத்தமன் பசுபதிபரமனைம்முகத்தோன் (உக)

அந்தவேலையி னருச்சகனகங்குழைந்தவ்வூர்ச்
சந்தநான்மறைக கிழவர்தம்வீதியைத்தணந்து
முந்தைவீதியி னிடந்தொறுங்குறுகியேமுகக்கண
எந்தையாப்பனூ ரிறையவர்மொழியிதென்றியம்பும். (உஉ)

சிற்பரன்றிரு நாமமுச்சரிப்பவர்திருநீ
றற்புடம்பினி லணிபவரவனையர்ச்சிப்போர்
கற்பின்மேம்படு வனிதையர்யாவருங்கழறு
மிற்பனிங்கிது சத்தியஞ்சததியங்கேண்மின். (உங)

மதிமுடித்தநங் கீலகநாயகர்வயனெற்
பதர்பிடிப்பநீர் பருத்தியினிறைத்தநாற்பனவர்
சிதைவுறப்பெருங் கன்மழையுருமொடுஞ்சிந்திப்
பதியறக்கெடும் போமினப்பாலெனப்பகர்ந்தான். (உச)

சொன்னவாசகஞ் செவிநுழைந்தீர்த்திடத்துயோ
ரன்னமாநகர் துறந்துசென்றயனகரடைந்தார்
பின்னர்மூடரு மறுதொழிற்குரியரும்பெயரா
தென்னிதாகுமென் றிகழ்ந்தனரிற்கணேயிருந்தார். (உரு)

ஆதிசைவரின் மாசிலான்மனைவிபாலரனு
ரோதியேபிய வருண்மொழிபகர்ந்தவளோடும்

போதுநன்னெறி விடையடிச்சுவடுகண்பொருந்த
நாதனூர்திரு வருணினைந்தகநெகநடந்தான். (உசு)

அக்கணத்தெழு முகிற்குலமரனதாணையில்வான்
மிக்கெழுந்துக முடிவெனமன்பதைவெருவத
தக்கபாதலத் தரவிறையுடனெளிதரவெண்
டிக்கயங்களுஞ் செவிடுறவிடித்தனதிரண்டே. (உஎ)

மீதுவிப்பிரர் விழிமணிதெறித்திடமின்னிக்
காதடைப்பவார்த் தனவவர்சிகைத்தலைகடிதிற்
பேதமுற்றெதிர் பிளப்பவன்பெருங்கலவெஙகால
தூதர்விட்டெறி கவண்கல்கொலீதெனச்சொரிந்த. (உஅ)

இடிக்குலஞ்சிலை மழையொடுஞ்சிதறிடவெங்கும்
வடிக்கும்வெண்சுதை தீற்றியமாடமாளிகைகள்
கொடிக்கொள்கோபுர மாலயமரங்குசெய்குன்றம்
பொடிக்குலத்தொடும் வேறறத்தகர்ந்தனபுரமே. (உகூ)

மக்கள்பேர்சொலி யழைப்பர்மற்றவர்சொரிமழைக்கற்
றெருக்கசெம்புனீ ருடன்வரக்கணடுயிர்சோர்வா
ரொக்கலிற்சிறு குழவியையெடுப்பதற்கோடிப்
புக்கமாளிகை யுருமினுலிடிந்துயிர்போவார். (௩0)

கருத்தழிந்தியா மருச்சகனிரப்புரைகடிந்து
பருத்திசெய்ததிற் பலித்ததிப்பலனெனப்பகர்வா
ரருத்தியுற்றுயிர் பிழைத்திடச்செய்யிலாப்புடைய
நிருத்தர்கோயிற்கே கொடுப்பநம்பங்கெனநினைப்பார் (௩க)

உரியபங்கினுக் குள்ளநீரிறைக்கவுமுற்ற
பரிசிதென்னிலாப் புடையவர்கோயிலுட்பட்ட
திரவியங்கவர்ந் தவர்படுஞ்செய்கையார்தெரிப்பார்
நரகமுற்றுங்கொள் காணியங்கவர்க்கெனநவில்வார். (௩உ)

தெய்வநாயகன் வயலில்வெஞ்சாலியைச்சிதைத்த
வெய்யதீவினை கொடிதென்பர்சிவனருள்விலகாச்
சைவவேதியன் மனைபுகில்யாமெலாந்தடையற்
றுய்யலாமென வோடுவரிடையிலவீழ்ந்துலப்பர். (௩௩)

மூதிருமென்புகண் முரிந்திடமுகந்தலைகரங்கால்
பிதிரமெய்யெலாங் குருதியந்தாரைநீர்பெருக
வதிரும்வானக நின்றுவீழ்சிலைமழையன்றி
யுதிரமாரியுஞ் சொரிந்தெனக்கிடந்ததவ்வூருள். (௩௪)

மாசிலாவரு டத்திலவ்வாப்பனூர்மறைந்து
தேசிலாவகை யன்றுதொட்டிருந்ததுசிறந்தோர
பேசிலாரமு தனையவாப்புடையவெம்பெருமா
னாசிலாலவாய்ப் பெருந்திருநகர்வயினணுகி (௩௫)

மருக்கமழ்கொன்றை வனமலிவைகையின்வடபா
லிருககவுன்னினனப் பொழுதிடவநாயகனித
திருககிளர்வனத் திருப்பதோலனெனசசெப்பி
யருககநன்மலர் வேணியனடிபணிந்தைய. (௩௬)

இத்தலப்பெய ரென்பெயராகவீங்குறையு
மததநின்றிரு நாமமுமதற்கிசைபெயரா
யுததமப்புவி யிடபபுரேசனென்றுரைப்ப
நிததமாவரந் தருகெனக்கொடுத்துப்பின்னிமலன் (௩௭)

இன்னமோர்வரந் தருதும்யாமென்னனிலெமக்கு
மன்னுதென்றிசை விடுமொருகணையெல்லைவனசந்
துன்னுதீர்த்தமொன் றுன்பெயராற்கணடுசுருதி
பன்னியப்புன லாவெலமையாட்டெனப்பணித்து. (௩௮)

இடவதீர்த்தத்தைத் தெரிசிக்கிற்பரிசசிக்கிலினிமை
தொடரவுட்கொளிற் குடைந்திடினறமுதற்றொகைநா
லுடையமெய்ப்பய னடைவரீதுண்மையென்றுரைத்து
வடிவின்மேம்படு நந்தியைமனமகிழ்வித்து. (௩௯)

அம்பிகைகுர வங்கமழ்குழலணங்கவள்சேய்
தும்பிமாமுகன் றன்றொடங்கமர்ந்தனன்சுருதி
யெம்பிரானணி யாப்பனூரிறையவனிமையோர்
தம்பிரானுமை தனிப்பிரான்சராசரத்தலைவன். (௪0)

வேறு.

ஆதிநாளிலிடவபுரப்பே ரானகாதைவரவிதுசொற்றோ
ரீதிலேசொலொருகவிகற்றோ ரீறிலாதபொருள்செவியுற்றோர்
வேதநாதர்கயிலைவரைக்கே மேவிவாழ்வரெனமுனிவர்க்கே
சூதனோதவனிருபொற்றாள் சூடினார்கடமதுசிரத்தே. (௪௧)

இடவபுரச்சருக்க முற்றிற்று

---

ஆ திருவிருத்தம். ௨0௮.

# அன்னவினோதச்சருக்கம்.

—— :o ——

பின்னர்முனிவராப்பனூர்ப் பெருமானிடவபுரநாத
னன்னவினோதனெனுந்திருப்பே ரடைந்தநிலையீங்கருளென்னச
சொன்னமொழியாற்சூதமுனி சுடர்ச்செஞ்சடிலமுடிதுளக்கிக
கன்னன்மதுரமபழுத்தனைய கதைநீர்கேணமினெனமொழிவான்.

உம்பர்தொழுங்கந்தரனூப்ப னூர்நின்றிடவபுரத்தினமர்ந
திம்பர்வணங்கவிருந்ததற்பி னிறைவனடியர்சசனைபுரியு
நம்பிசிவவேதியர்திலக னலங்கூர்குடும்பத்துடனடநதே
யம்பொன்சடிலரளித்ததிரு வடையாளத்தினெறிசசெலவான் (உ)

நடக்கும்வழிமேலரிபிரமர் நயனங்களிகூர்தரவணங்கக, கிடககு
ந்தருமவிடைப்பெருமான் கிளர்காற்சுவடுமபொறபூவுந், தடக்குங்கு
மப்பூண்முலைமனையா டன்பாறகாட்டிவினைந்துவிண்ணீ, ரடக்குஞ
சடையார்சேவடியீ தார்க்குககிடைககுமெனத்தொழுவான். (௩)

தொழுதுதொழுதுமணிவிழிநீர் துளும்பததுளும்பநடித்துநடித, த
ழுதுகுழைந்துளுருகிமகிழ்ந் தாராமையினுலடிச்சுவடு, முழுதுமகண
மேலொற்றியொற்றி முதிர்கறபுடையாளுடன்சிவன்பே, ரெழுது
நாவனருள்வழிசசென் றிடவபுரததுளடைந்தானல் (௪)

அந்தண்கயிலைமலைமருந்தை யமுதையமரர்சிகாமணியைச்
செந்தண்பவளச்சிவக்கொழுந்தைத் திருவாப்புடையபெருமானை
மைந்தர்மலைமாதொடுமிடவ மடுநீரொடுங்கணடதிசயித்துச்
சிந்தைமலர்ந்துகுவித்திருகை சிரமேற்குடியீதுரைப்பான். (ரு)

வாயுளிருக்கும்நான்மறையோய் வானுளிருக்கும்பெருந்தேவ
ராயுளிருக்குமணிமிடற்றோ யறிவுளிருக்குந்திருவுருவோய்
வேயுளிருக்குமணிப்பசுந்தோள் விமலைகுரவங்கமழ்குழலெந
தாயுளிருக்குமொருபுறத்தோய் தந்தாயவழிநான்வந்தேனல் (சு)

வந்தேனுனையானுட்டுதற்கு வையையைநீருண்டருச்சனைக்குச்
செந்தேன்மலருண்டிவ்வனத்திற் றேவேயரியதிருவமுதுக்
கந்தோயாதுண்டென்னிடையே யறியாய்கொல்லோசிறுவிலைநாட்
டந்தாதரிப்பார்யார்யானித் தலத்திலறிந்ததுனையன்றோ. (எ)

உண்ணுவமுதேயுனைப்பூசித் துண்புதெனநுவிருத்தியவை
பண்ணுதொழியிற்சீவனமெப் படியென்றிரந்துமொழிந்திடலுங்

கண்ணாற்காணவருவுருவின் காட்சியிலிங்கத்திடைத்தோன்றிப
பண்ணார்மறையோர்வந்தனையோ பாவையோடுமெனவினவி. (அ)

உரியவாப்பனூரிடைநின் றுயர்வெள்விடையினடந்திங்ஙன்
மருவியாட்சிபெறவிருந்தேம் வருந்திவிடைத்தேவெனைவந்தித
தரியதலமாதியமூன்று மடியேன்பெயர்கொண்டருளுகெனப
பரிவினுரைப்பமகிழ்ந்துவரம் பாலித்தேமிப்பார்விளங்க (௯)

இப்பானீவேண்டுறும்பொருளுக கிந்தவேகவதிமணலுங்
கைப்பால்வாரிகொடுவனைமட் கலனிட்டறலிட்டுலையேற்றி
வெப்பார்காட்டத்தெரிமூட்டி மெய்யன்புறுத்தியடிலமுதாந
தபபாததனையெமக்குநிவேதனஞ் செய்தனையிறகொண்போகி. (௧0)

கற்புக்குரியதுணையோடுங் காதற்குரியபுதல்வரொடு
மறபுக்குரியநீயுமகிழ்ந் தருந்தியருந்தியெமைவழிபட்
டிற்புக்குறைவாயீதியார்க்குமிசை யேலிவையெபபகல்வெளியாகு
சொற்புக்குறுமப்பகலடிசில தோன்றாதிருககுஞசொன்னேமால ()

ஈதேலாமுன்பொருட்டுரைத்தே மென்றேயிலிங்கததுட்புகுத
நாதனிடபபுரப்பரம னல்குங்கருணைத்திறம்போற்றிச
சிதமலிவையையிற்படிந்து திருவெணமணல்வேணடுபவெடுத்துக்
காதனீர்விட்டுலைப்பெய்து கனலவாய்த்துவரி * ட்டடப்புகுந்தான்.

அடும்போதரனைநஞ்சமமு தாககுமணியையரும்பொருளை
நெடும்போதுளத்திநினைத்திடலு நெறபால்டிசிலெனப்பாகம்
படும்போதன்னமறியாத பரனையாட்டிநறுந்தேன்வாய்
விடும்போதர்ச்சித்தன்னமுநி வேதித்திறைஞ்சிமனைபுகுந்தான். (௧௩)

அணியாப்புடையார்கொடுத்ததிரு வமுதைககுடும்பத்துடனருநதித
தணியாப்பசிதீர்நதகத்துவகை தழைத்தாருலகம்வினவாதப்
பணியாற்சைவனியற்றிவருநாளிலொருநாட்பரந்துபசிப்
பிணியாறறமிழ்நாட் டுயிர்வருந்தும்பெற்றிபார்த்தங்கவன்மனையாள்

காந்தனிடத்தினவனிருகண் களிப்பச்சிலம்புபுலம்பநறுஞ்
சாந்தமணிந்ததனந்ததும்பத் ததும்பநடந்துவரிக்குயிலும்
வாயந்தகிளியும்வாயடைப்ப மதுரந்துளிப்பமலர்முருக்கிற
சேந்தபவளமணிச்செவ்வாய் திறந்தாடிறந்திங்கிவைகேட்பாள். ௧௫

இவ்வூர்மனித்தர்பசியெனுந்தீக் கிலம்பாடெனுநெயிறைத்தெழுப்பி
யெவ்வூர்புகுவோமுய்வதற்கென் றியம்பயாமிவ்வூர்புகுந்தேங

---

* துவர் - விறகு.

கைவாய்சிவப்பயானுலக்கை யோச்சாதில்லங்காத்திருப்பத்
தெய்வீகப் பேரமுத திகந்தினமுந்தருவதெவனென்ருள். (கசு)

அமுதினுரைக்குமறுத்தெதிர்சொ லாடான்சிறுபோதிருந்துமலர்க
குமுதமணிவாய்த்திருவேயான் கூறினுளையமுதுதவா
நமதுவிருத்திகெடும்பசிததீ நமையுந்தொடாந்துசுடுமதனுற்
சுமதியுடையாய்கேளற்க சும்மாவிருநீயெனச்சொன்னுன். (கஎ)

கேட்டாண்மதிவானுதற்குறுவேர்கிளர்ந்தாள்புகைநதாளிதழதுடித
டட்டாவேறகட்கடைசிவந்தாள் சிரித்தாள்புருவமேனெரிததா [தா
ளுடடாமரைமென்முகம்புலர்ந்தா ணணபாநன்றுநன்றுசொல்லிக
காட்டாயெனிலியானின்னே யுன்காறகீழ்விடுவெனுயிரென்ருள். ()

அந்தமாற்றஞ்செவிகுடைநது ளாவிபதைப்பமனம்பதைப்பப்
பந்தயாகவைநடுங்கிநம்பாாப்ப னிமியேபனிமாமதிக்கண்ணி
யெந்தையாப்பனூரிடைப்பண டியறறுஞ்செயலுமறிதியவ்வூாச்
சிந்தைநீததிவ்விடையடைந்த செயலுந்தெரிதிதெரிதியால. (ககூ)

பின்னரணியாப்புடையபிரான் பெருந்தாட்டுணைகைகுவித்திறை ஞ்சி, யென்னைவருத்தும்பசிப்பிணிதீாத் தாளென்றிரப்பவெதிர் தோன்றிச், சொன்னவுபாயமென்சொல்கேன் சொன்றற்சுரருமதி சயிப்பா, ரன்னநடையாய்நீகேட்கி லனந்தானந்தமடைதியால ()

அன்னவுபாயம்யாதெனினந் தளைநீர்வேகவதிமணலை,யுன்னதார் வநிரம்பவெடுத துலைவைத்தடிலோதனமாகும்,பின்னர்நிவேதித்தரு ந்திதனைப் பிறருக்குரையேலுரைக்கினதி, துன்னுமணலாமெனச சொன்றன் சொன்னேன்சொன்னேனெனவோடும். (உக)

செவ்வாய்க்கமுதாயினவிந்நாட் செவிக்குமமுதாயினவென்றே
யைவாயரவமணிந்தபிரா னருளுமடிகளருச்சனைசெய்
மெய்வாய்மிறைவேதியனன்பும் வியந்தானந்தக்கடற்படிந்தாள்
சைவாகமநான்முழுதுணர்ந்தோன் சாவாத்துயரக்கடல்வீழ்ந்தான்

வேறு.

அப்பகல்கழிந் தெதிர்பகலிப்பக லடியவர்க்யெளியானை, மூப்பர ம்பொருண் முதல்வனைவழிபடின் முதிர்புனன்மலர்போலுஞ, செப் புமின்னமுத மைப்பதெப்படியெனத் தெருமாலுறுங்காலை, யொப் பில்கற்புடைமறைக்கொடிபதிக்கிவை யுய்த்துரைத்தனண்மாதோ.()

ஐயநீயுயிருட லியானிதனில்வே றுயதென்மருளேண்மற், றய்ய நம்பொருட் டுரைத்தசொன்மையலா லொருவருமறியார்நீர், வை யைநன்னதி படிந்துமுன்போலுலை வைத்தடின்மணற்சோறும், பொய்யுறுதா னருண்மொழியிம்மெனப் போகெனப்புகன்ருளால்

அம்மொழிப்படி யீசனைப்பூசைசெய் யருத்திமுனிர்த்தேகச்
செம்மனத்தவன் கேடன்கழீஇயங்கித் திருமணவலைவாய்ப்பெய்
திம்மெனப்புகுந் தட்டில்வாய்த்துவர்முழு தெரிதெரித்தனங்காணு
தும்மைநற்பய னுலந்ததென்றவவெரி யுதரமுற்றெழச்சோர்வான்.

சன்னிதிக்கண்வந் தடியறவீழ்தருத் தகைமையிற்பணிந்தேத்தி
யென்னினிச்சொல்வ துனக்கியான்யாவையு மிருந்திடததறிவாய்நீ
யென்னலிற்பழிக் கஞ்சினின்றுணர்ந்தின னேரிழைநசையன்ற்
கன்னியுத்தமிக் கொருபுறமளித்தநங் கடவுளேயெனநாதன். (உ௬)

வருத்தமொன்றுறி லடியவர்விரைந்தெதிர் வந்துநின்றிரந்தோதுங்
கருத்தறிந்தவை முடிப்பதுவிரதமாங் கண்ணுதலெதிர்தோன்றி
யருத்திகூர்திரு மறையவவைசவரு ளதிகவுத்தமகேணீ
திருத்தவையையைந் துறைமணவலமுதடுஞ் செயலினிமுடியாதால்.()

நீயிரக்குமிக் குறைக்கியாமொருநலே நீணிலத்துயிர்க்கெல்லாந்
தாயிரக்கமிக் குள்ளவன்சுகுணனுந் தண்கதிர்மருமான்பாற
போயிரக்கமுற்றிர வெதிர்கனவிடைப்புகன் றதுண்டவன்பானன்
றுயுரைத்தியாம் வந்துமிருந்துமடைவினிற்போயென்றான். உ௮

என்றநாதனைவணங்கினனிறைவனு மிலிங்கத்துண்மறைந்தான்
பின், றென்றனுடனைக்காண்பதறகந்தணன் சென்றனன்செலுமுன்
னர், மின்றவாமுடிக்கோமகன்பேரவை மேவுமந்திரரோடு, மன்றி
ராக்கனவிடைத்தனிக்கண்டபே ரதிசயநவின்றனல். (உ௯)

வேதவிப்பிரவேடராய்விழிமணி மெய்யினராய்ப்பூதி
சாதனத்தவநடையராயொருவர்தாந் தனித்துவந்தெனைவேந்தே
நீதமற்றபோரப்பனூரெனுநகர் நின்றுநம்மனையாளுந்
காதன்மக்களும்வீடிலேம்வையையின் கரைமருஙகிருக்கின்றேம்.()

அன்றியும்பசித்திருந்தனமமுதினுக் கடைந்தனநின்பாலியா
மென்றுகூறியங்ஙனமுறைநதேகின ரென்றலுங்கனிந்தூறுந்
துன்றிருங்கனிச்சுவையெனசசெவிப்புலன் சுவைப்பமந்திரர்யாரு
நன்றுநன்றெனமகிழ்ந்தணியாப்பனூர் நாதனைப்புகழ்காலை. (௩௧)

ஆதியாகமவேதியனரசவை யணுகியங்ஙனம்வைகி
யீதியாப்புடைநாயகர்திருவெணணீ றெனக்கரஙகுவித்தேற்று
நீதியானுதனிலவுறத்தரித்தன னிமலனர்ச்சகன்பின்னர்ச் [ன்.()
சோதிவான்மதிவேந்தகேளற்புதஞ் சொல்லுகேனெனச்சொல்வா

மற்றுநீதியிலாப்பனூர்விடுத்தநும் வரும்வழிக்கடையாளஞ்
சொற்றதுந்திருமனையவளுடன்கூறி தொடர்ந்துபின்படர்ந்திங்ங

னுற்றதுந்துறைமணலமுதுகந்தது முண்மையில்லவள்பாற்போ
யற்றதும்பரன்விடைகொடுத்துளைத்தது மறைந்தனனயராதே. ()

வேந்தர்சேகரன்குதூகலித்துருகினன் வேத்தவையுளர்கோமான்
சாந்தநீற்றினன்கனவுரைபுகன்றதுஞ் சைவநூறசிகையாளன் [ற
கூர்ந்துவந்நிலைபகர்ந்ததுஞ்சருககளைக் குன்றிற்றேன்மழைநான்
தாந்தகைத்தெனமகிழ்ந்தனர்புகழ்ந்தன ராப்புடையவர்நாமம். ௩௪

இளைத்தகாதன்முனீர்த்தெழவேதிய னெழுந்துமுன்செலச்சாந்
த, வளைததரேசனுமமைசசர்பின்வரப்பெரு வளைப்புறந்திளைக்கை
யா, லளைத்தசாந்தணிந்தலர்சொரிந்தமுதுமங் கருததியார்த்தெழும்
வையைக, களைத்தனிச்சிவக்கொழுந்தினைவிளைந்துசெல் காவலன்
கண்டானல். (௩௫)

கண்டகட்பொறிவழியெழும்புனலூரங் கலந்தமுத்திளைத்தீரா
வண்டலிட்டிழிதரமயிர்முகிட்பெழ மலர்க்கரஙகுவித்தேகித்
தொண்டருக்கெளிவருங்கருணையஙகடல் துணையடிமுடிசூடத் [ல்.
தண்டெனத்தரைமிசைப்பணிந்தெழுந்தருடழைததிடககரைந்தானு

வேறு.

விளையிருக்குஞ்செழுங்கமல மேலிருக்கும்பொருளுணரா
வுளையிருக்குஞ்சதுர்மறையி னுச்சியிருக்கத்தனிவெள்
வளையிருககத்தொழுமடியார் மனமிருக்கமணிவையைக்
களையிருக்குஞ்செயலென்னோ களைகடந்தபரமேட்டி. (௩௭)

ஆடளிக்குநறுந்தேன் பெயம்புயற்கும்பாற்கடல்வாய்
நீடளிக்குளறிதுயில்கொ ணெடியவற்குங்கற்பாந்த
நாடளிக்கும்பிமெம்யோக நற்றவர்க்குமற்றவர்கரும்
வீடளிகருநீகனவில் வீடிரந்தசெயலென்னே. (௩௮)

கமழ்முலைச்சிற்றரும்பன்ன மூரலிளங்கணியமலை
சமைவுறத்தனிடததிருப்பத் தனியோதனஞ்சொன்றி
நிமிரநற்கந்தரமிருததி நிறைதருவிண்ணாட்டவர்க்கு
மமுதளிக்குநீகனவி லமுதிரந்தபரிசென்னே. (௩௯)

என்றினையவகைபன்னி யீறில்களிப்படைந்திறைவன்
றுன்றியநுண்மதியமைச்சர் தம்மொடும்பொன்சொரிகொன்றை
மன்றன்மலர்த்தருநிழலுள் வதிபவற்குமலைமகட்கு
நன்றமைபொற்றிருக்கோயி லினிதெடுக்கநனிநினைந்தான், (௪௦)

வேறு.

சிற்பநூற்பொருண் முழுவதுங்கைகொடுதேற்றுங்
கற்பினூர்தமை யழைத்திருகண்சிறைப்படுத்தும்

பொற்பினுன்மக மேருவின்முடிமிசைப்புனைய
நற்பொன்மாமுடி வகுத்தெனமானநன்கமைத்து. (௪௧)

அருத்தமண்டப மாதிமாமண்டபமறுகாற்
பொருத்துபீடிகை மண்டபம்பொன்னனாரொடு
நிருத்தமண்டபந் திருமதில்கோபுரநிமலற்
கருத்தியான்முடித் துமைக்குமப்படிவகுத்தமைத்து. (௪௨)

பானுமுற்படப் பகர்பரிவாரவானவற்கு
மேனிலத்தினல் லுறையுளும்விதிமுறைதிருத்தி
வானுயர்த்தவெள் விடைகொடிமரம்பலிபீடந்
தானியற்றினன் வேறுளபணிகளுஞ்சமைத்து (௪௩)

நந்திதீர்த்தத்தின் ஞாங்கர்சூழ்படித்துறைநவிற்றிச
சந்தியாமடங் கண்டுகற்றளிபபுறஞ்சாதி
சிந்துமாதவி வலம்புரிகணவிரஞ்சிறைத்தேன்
வந்துசூழ்மலர் மலியுநநதனவனம்வைதது (௪௪)

திருதமாலையினீர் புகவயலவளங்கிளர்கரு
மருதநன்னிலவளைப பினிலூர்களும்வழஙகிப்
பெரிதுபூசனையியற்றிப் பின்பேரியந்துவைபபக
கருதுமன்பர்கண களித்திடநலவிழாக்கணடு. (௪௫)

இன்பமுற்றடி யவர்குடிபுரப்பதறகிசைந்து
முன்புவையையெண மணலமுதுகநதருணமுறையா
லென்புநெகருகின் றிடவபுரேசனையிறைஞ்சி
யன்பினுலெடுத் தன்னவிநோதனென்றழைததான். (௪௬)

சன்னிதிதநெரு வீதியினருச்சகன்றனக்கங
குன்னதத்திரு மாளிகையெடுத்துமற்றுள்ள
நன்னலததகத் தடியவர்க்குறையுளுநவின்று
மன்னமெய்த்திரு வைதிகாநியமமும்வகுததது (௪௭)

நீதிமன்னவர் வணிகர்பின்னவர்குடிநெருங்கும்
வீதிதுன்னுந லாவணமமைததுநீள்விணனோர்
கோதினன்னக ரெனும்படிசெய்தனன்குளிர்வெண
சோதிமின்னிய மதிக்குலக்கோமகன்சுகுணன். (௪௮)

இத்தகைச்சிவ தருமநற்பணிசெயும்மியலபாற்
சுத்தமுத்தமிழ் நாடெலாமழைவளஞ்சுரப்ப
மொய்த்தபல்லுயிர் புரக்குகாட்டன்குலமுழுதோம்
புத்தமத்தனி யாண்மகவின்றினிதுவந்தான். (௪௯)

வண்மையுங்குல மானமும்பொறைமையும்வழுவா
வுண்மையுஞ்சிவ தருமமும்புகழ்மையுமுடையாத்
திண்மையுந்தனி மகவுடன்வளர்த்தணிதிகழ்பா
ரெணமதநகயத் தொடுஞ்சுமந்தரசுவீற்றிருந்தான். (௫௦)

வேறு.

ஈறிலன்னவி னோதனெனுங்கதையீதுசொன்னவர் கேள்விமுய
ன்றுளோர், தேறுநன்னிதி யாயுள்பெரும்புகழ்சேர்வரின்னனூர்
பணிகொண்டிடரார்,மாறின்மன்னர்ச மானமொனும்படிவாழ்வரொன்ன
வுமாதவர்முன்சொன, னீறுமின்னிய மேனியனந்தணர்நேயமுன்
னியருதன்மகிழ்ந்தரோ. (௫௧)

அன்னவினோதச்சருக்க முற்றிற்று

ஆ திருவிருத்தம். ௨௫௬.

# சந்திரசேனச்சருக்கம்.

———:o·———

கேட்டமாதவர்குழாம் பின்னுங்கேட்பது
வேட்டனம்யாந்தனி விடைப்பிரான்பெயா
சூட்டுமதநீர்த்தத்தின் கதைசுருக்கிமுன்
காட்டினைவிரிதநிக் கழறுவாயென்றார் (௧)

நந்திநாயகப் பெயர்த்திருததநன்கதை
சிந்தியாவிருவிழி பனிப்பத்தேக்கிய
புந்தியான்சூதனும் புராணதேசிக
னந்தணீர்கேண்மினென் றறைதன்மேயினான் (௨)

பண்டைநாண்மந்திரி யுடனொர்பார்த்திபன்
குண்டைநீர்மடுவிடைக் குடைந்துமேற்குலக
கெண்டைவாணயனியாற் கிடைத்ததீப்பழி
விண்டயர்வுயிர்த்தனன் விளைந்தென்றோதினான் (௩)

முதுமறையிருடிகண் மொழிந்தவேந்தனியா
ரெதுபெயரெதுநக ரிவற்குப்பூசுர
வதைநெடும்பழியெவள் வாஞ்சையானுற்ற
ததுதொடர்ந்தலைப்பவீங் கடைந்தவாறெவன். (௪)

உளமதியமைச்சனே டெற்றிந்நீர்படீஇ
விளமதிமருட்டுவெவ் வினையிற்றீர்ந்துசூழ்
வளமதினற்றளி வாயிருழ்ந்தநன்
முளமதிக்கண்ணியங் கடவுண்முன்செலா (௫)

ஆதியையடிபணிந் தரிதினெத்துதி
யோதியவ்வரசன்ற னகர்க்கணுற்றன
னீதினிதெமக்குநன் கியம்புவாயென
நீதியின்வரன்முறை நிகழ்த்துவானரோ. (௬)

ஊடுமின்கொடியனு ருணர்த்துநாதனைக்
கூடுமின்கலவிமே னிலையிற்கோதற
நாடும்வெண்கதிர்மதி னந்துடைப்பதொத
தாடும்வெண்கொடிதிக ழுவந்திமாநகர். (௭)

மறையொலிமுழவொலி மாதராடலின்
றுறையொலியரவொலி துள்ளநாடொறுங
கறையணிமிடற்றுமா காளவீசனுண்
டுறைதருமுலகுயிர்க் குவகைநல்கியே (௮)

முனைவருமுழுதுணர் மோனருந்தவந்
தெனைவருமசைவற விருக்கும்யோகரு
மனைவருமுனிவரு மற்றைமூவரு
மனைவருஞ்சரிப்பதா லளகைதோற்குமால. (௯)

அத்திருநகர்புரந் தளிக்குமன்னவன்
பைத்தலைச்சுடிகைமீக் கிடந்தபாரகம்
வைத்ததிண்புயப்பெரு வலியினுன்மடற்
சித்திரத்தெழினலஞ் சிறக்குஞ்செவ்வியான் (௧0)

கழுதுவாய்சிவப்புறப் பகைஞர்கன்னிய
ரழுதுகண்சிவப்புற வரசர்பொன்முடி
யுழுதுகால்சிவப்புறக் கணக்கர்க்கொண்கர
மெழுதுகைசிவப்புற வெடுக்கும்வாளினன். (௧௧)

புத்தியைத்திரிக்கும்வேள் புணர்ச்சிநூன்முறை
சித்திரக்குவிமுலை யவரைச்சேக்கையி
னித்தம்வைத்திடைத்துகி னெகிழ்ப்பதன்றியோர
முத்திமற்றிலையென முடிக்கும்பெற்றியான்.' (௧௨)

கன்னியராடலே நிறைந்தகண்ணினன்
கன்னியர்பாடலே நுழைந்தகாதினன்

கன்னியருடலே திருத்துங்கையினன்
கன்னியர்காமமே கனிந்தசிந்தையான். (௧௩)

சதமறுதுறுந்தொகைத் தையலாரையற்
புதமறுநறுமலர் பொதிந்தபாயலி
னிதமறுதணைவது நேமமேற்கொளா
மதமறுயானையின் மதிமயங்குவான். (௧௪)

கொலைவிளையாடும்வேற் குரிசில்கோதையர்
முலைவிளையாடும்பொன் மார்பன்மூரிவெஞ்
சிலைவிளையாடுந்தோட் செம்மலெண்டிசைத்
தலைவிளையாடும்பேர்ச் சந்திரசேனனே. (௧௫)

ஆமத்தார்வேந்தன தமைச்சனன்னவன்
காமத்தாலழிதருங் கருத்துக்கேற்பநற்
றூமத்தார்க்குழலியர்த் துரீஇப்புணர்ப்பவ
னாமத்தாற்சுகுணன்சென் னடையிறநூர்கருணன் (௧௬)

அன்னவனெடுந்தனி யரசனோர்பகன்
மன்னியகாமநோய் மலருமாலையி
லுன்னதநெடுங்கொடி யுபரிகைககணே
கன்னலஞ்சிலைகடை குழைப்பவைகினன் (௧௭)

மருக்கமழ்நகர் வீதிவாய்ப்பெருந்
திருககுலமறையவர் தெரிவைமேம்படு
மரகதினையூட்டி னலமுதைத்திற்றிய
முருக்கிதழ்வாயினை முத்தமூரலாள் (௧௮)

தேனையும்பாகையுந் திரட்டுஞ்செஞ்சொலாள
மானையுமீனையு மருட்டுங்கண்ணினு
னூனையுமுயிரையு முருக்கும்பொற்பினள
வானையுமண்ணையு மயக்குங்காட்சியாள் (௧௯)

ஒருசிறுநூல்கிடந் தொசியவோங்கிய
விருகுரும்பையுமசைந் தேறக்காந்தளம்
பெருமலர்வீசிவெண் பிறைபணிப்பநற
றிருமலர்சிவப்பவத் தெருவிற்செல்கின்றாள். (௨௦)

மேனிலத்தேவரும் விரும்பியங்கவா
கானிலத்தேவருங் கவின்கொண்டுற்றிடும்
பூநிலத்தேவர்பொற் றொடியைப்போதமி
னூனிலககோமக னயந்துநோக்கினன். (௨௧)

## வேறு.

மருமலர்க்குழலோ குழல்வகிர்ந்ததனுள் வரித்தசிந்தூரமோவணரு, திருநறுநுதலோ திலதமோநெறித்த சிறுகொடிப்புருவமோவெழுதுங், கருவிழியழகோ கடைவிழித்துடிப்போ காளையர்க்கனங்கவேள்விடுத்த, நிருபமேயனைய திதுவெனவெவரு நிகழ்த்துபொன்னேலவார்குழையோ. (உஉ)

கணணடியனைய கபோலமோநாசி காபரணத்தின்முத் தசைவோ, தண்ணறுங்கனிவா யதரமோவிரதந் ததும்பிமேலவழிந்த தேன்மொழியோ, வண்ணலங்கமுகி னணியியன்மிடற்றோ வமைத்தடந்தோள்களோசிவந்த, வண்ணவிறபவளங் கிளைத்ததணகிளையின் வாயந்தநன்மணிவிரல்வடிவோ. (உ௩)

சந்தனக்கலவைச் செழுநறுஞ்சேற்றிற் றணபணிநீரினுண்முளைத்த, சுந்தரககமலத துணைமுகையிதெனச சுணங்குபூததொளிர்தருமுலையோ, வுந்தியிறகிளைத்த வணிமயிரொழுஙகோ வொருபிடிநுசுப்பினதொசிவோ, மைந்தருககமுத மூறறிருந்தொழுக வாய்ந்தபேரல்குலின்வனப்போ. (உ௪)

நாவலாறடுத்த கரைவளர்கதலி நலங்கவர்பொலங்கவா னெழிலோ, சேவலார்முடித்த மதிமனைப்புறனிற் றிருந்தியதசைமுழந்தாளோ, தூவலார்பகழித தூணியின்கணைககாற் றேற்றமோசிறடித்துணையோ, பாவலாருரைகரு முவமையுங்கடந்த பாவையோழிவளெனநினைந்தான். (உ௫)

நினைத்தநெஞ்சுருவி மலர்க்கணை துளைப்ப நெட்டுயிர்ப்பெறிந்து ளைந்துளைந்து, மனைத்தவமுனிவர் பெருங்குலக்கற்பின் மடந்தையென்றறிநதுந்தன்மனத்துட், டினைத்தனையெனினு முதுக்குறைவிலனாய்த் தெரிவைதோணலனுகர்காதல, பனைத்தனைவளரப் பார்த்தகணடிருப்பாப் பார்த்திபனமைசசனைவாயால். (உ௬)

அழைத்துநீள்கரததாற் சுட்டிமாகிவள்பே ரல்குலின்றுறைப்படியாரவந், தழைத்தமற்றினியிவ் வொருததியேயமையுஞ் சதவணிதையர்சுகம்விரும்பேன், பிழைத்திடிலுயயேன் கொணர்கெனமுகமன் பேசினனபேசலுமனையா, ளுழைத்தனிமகிழ்நன் பிரிவிலாதிருககி னுஞற்றுவதெவனெனவுரைப்பான். (உ௭)

சர்த்தினைத்துரந்து மதனுடல்பிளப்பத் தாழ்ப்பதெனிவடனைமுனிவன், சிரத்தினைத்தடிந்து கொணர்கெனச்சுடர்வா டிண்கைதொட்டிடிப்ந்திடுகாலைக், கரத்தினையொடுக்கிக் கொடுங்கொலையிதையா

ன் காண்கிலேனெனக்கடிதோடிக், குரத்தினைத்தொடர்காற் பசும் பரித்தேரோன் குறைந்தனன்மறைந்தனன்குடபால். (௨௮)

இளமையும்பொருளு மடமையுமரசு மிவையொருநான்குமாய கெய்தும், வளமையிலரசன் பழிப்புகழ்பரந்த வண்ணமொத்திருண்டளகங்கு, லளவகன்முறைசெ யரசனதேவ லாணையாறெழுகுமங் திரியும், விளையொலிநகர்துஞ் சளவுநின்றேகி மிக்கவர்கொடிமனை புகுந்தான். (௨௯)

பணிமலர்த்தளிம மீமிசைத்துயிலும் பார்ப்பணிமருங்குகண்படைகொ, டணிமறைப்பனவன் சிகைத்தலைதடறு * தணந்தகூர்ங்கருவி யாற்றடிந்து, கணிபழுத்தமைந்த மழலையந்தீஞ்சொற் கவிரிதழக்கு விழுலைககணைக்கட், குணிசிலைப்புருவக் கருநெடுங்கூந்தற் கொடியினைப்பிடித்தலுந்துடித்தாள். (௩0)

வேறு.

இறந்தவாடவற் கேங்கியங்கெய்துறை
துறந்தவாளவற் கண்டுதுண்ணென்றழத்
திறந்தவாயினைச் சிக்குறச்சேமியா
மறந்தவாமதி மன்னன்முன்விட்டனன். (௩௧)

விட்டபோது விடாநசைவேந்தன்வே
டொட்டபோது சுடுவதெலாநின்கட்
பட்டபோது குளிர்ந்தனபாவைநீ
நட்டபோதென் னயப்பறிவாயரோ. (௩௨)

முலைத்தலைச்சுக நல்கிடின்மோகவேள்
கலைத்தலைத்தொழிற் காந்தையர்கைதொழ
வலைத்தலைத்திரு வன்னவுன்றன்னையென்
றலைத்தலைத்தனி தாங்குவன்யானென்றான் (௩௩)

என்றபோதத் திருசெவியின்றுளை
மன்றனாறு மலர்க்கையிற்சேமியா
நின்றநேரிழை நீதியைவேரொடுங்
கொன்றவேந்தனைப் பார்த்திவைகூறுவாள். (௩௪)

கொலைவிழைந்தவர் செய்ந்நன்றிகொன்றுவாழ
தலைவிழைந்தவர் சாதி † விழைந்தவர்
புலைவிழைந்தவர் பொற்பழிந்தேபிற
னிலைவிழைந்தவர் யாவருயர்ந்துளார். (௩௫)

---

* தடறு - உறை.

† சாதி - கள்.

தாரமல்லவர் தாயென்பதாயினை
சேருமன்னை நிருபர்முன்ஞேன்மனை
சாருமன்னை யினுந்தவத்தேசிகன்
பாரிபார்ப்பனி பார்க்கினதிகமால்.                (௩௬)

இன்னதன்மை யிருக்கமற்றியாரென
வென்னையுன்னினை யீறிலசெங்கோன்முறை
மன்னர்சென்னெறி மாறறினைமாற்றினை
கன்னவின்மனக காவலனீயென்முள்.                (௩௭)

குவடுபட்ட குவிமுலைககூாவிழி
யவடுவர்ககனி வாயினறைந்தசொற
றுவடுணர்க்கழை நாஞெலிதுன்றலிற்
செவிடுபட்ட செவியினன்கேட்டிலான்                (௩௮)

காதரப்பெருங காமுகரேறஞன்
மேதரத்தன மேற்றண்மிடுககிஞெ
லாதாரதினி லங்கையிஞன்மருஉம
போதரற்றினள் பொறபினிலொப்பிலாள                (௩௯)

அனையகாலை யரசனைவைதுநீஇ
மனையள்பாறறுயர் மாசறமாற்றுவா
ஞெனவவவேதியன் ருனிகவாப்பழி
வினையுருக்கொடு வந்துவிலககிஞன்.                (௪௦)

இடிகரும்வெம்பகு வாய்திறந்தேங்கும்பற்
கடிக்குமஞ்ச வுறுக்குங்கண்மேற்கனல்
பொடிக்குநின்று புகைந்துயிர்க்கும்பிட
ரடிக்கும்வஞ்சினங கூறுமடர்க்குமால்.                (௪௧)

என்னபாவ மிதுவென்றழுநகு
மன்னவாபழி தாவெனுமந்திரி
தன்னைவாபொர வென்னுந்தனித்தனி
இன்னல்கூரயிவ் வாறுதொடர்ந்ததால்                (௪௨)

வேறு.

மேவுமவந்திபு நாடுமிகந்துபின் வேறேகுங
காவலன்மந்திரி யோடியுழன்றிரு காலோய்வர்
கேவலவெம்பழி தீர்வகைகண்டிலர் கேதாரம்
போவதுபுந்தியி னீடுநினைந்தனர் போஞரால்.                (௪௩)

எவ்வுயிரோனு மருந்திடினெஞ்சத் திகவாதே
இவ்வியலிங்கம தாகத்திரட்ரு சிவதீர்த்தம்
வெளவுறமூழ்கினர் கேதாரத்தமர் மாதேவன்
செவ்வியதாண்மல ரங்கைவணங்கினர் சென்றாரால (சச)

கொங்கலர்சேர்பிரு தூதகவாவி குடைந்தேகிக்
கங்கையின்மூழ்கினா காசியிலீசன் கழல்பேணிப
பங்கமிலசீச யிலம்பணியாவருள் படாகோடி
சங்கரமேவின ரங்கணமர்ந்து தணந்தாரால (சரு)

கோதாவிரிகண வேணியினுகினி குளிருந்தண
போதார்பொன்முகி முதலாநதிகள புகுந்தாடித்
தீதார்பழிகழி யாதேதொடர்வுறு செயலெண்ணித
தாதாரிதழியர் யேகாம்பரநகர் சார்ந்தாரால. (சசு)

சைவாகமமுறை மலையாள்வழிபடு தண்கூதப
பைவாளரவணி பவாகான்மலாகள பணிந்தேகிப்
பெய்வார்மழைதவழ கரிசயிலத்துறை பெருமானுரு
செவ்வாய்வரத முகுநதனைவநதனை செயதாரால (சஎ)

சூழ்ந்தொளிர்காஞ்சி கடந்துதலன்பல தொழுதேமின்
றாழ்ந்தொளிர்வேணிய னுமையுடனாடிய தனிமன்றம
வாழ்ந்தொளிரில்லையி னெல்லைவணங்கி மகிழ்ந்தேவின
போழ்ந்தொளிர்கோபுர வாயில்பணிந்துள் புகுந்தாரால (சஅ)

சிமையநெடுஞ்சிலை யுடையபரம்பொருள் சிவஞான
மமையநிரம்பிய வெளியொளிமன்றினு ளகலாதே
யுமையவளம்பிகை பனைசிவசுந்தரி யுடனாடு
மிமையவர்கும்பிடு நடமிருகண்களி னெதிர்கண்டார். (சகூ)

இருவிழிமென்புன லருவிசொரிந்திட வெதிர்வீழா
வுருகினர்நின்றடி பரவினரஞ்சலி யுடன்மீளா
வரும்வழிகண்டன ருயர்சிவகங்கைநன் மலர்வாவிப
பொருகரையின்புடை யெழுகடலுண்டருள் புகழோனை. (ருo)

முதுதிரிபுண்டர நுதலனைமென்சடை முடியானை
யதிர்கடனஞ்சினை யமுதினுகர்ந்தவ னனையானைச்
சதுர்மறையின்பொரு ளறிவனையின்றமிழ் தருவானைப்
பொதியநெடுங்கிரி முடியினிருந்தருள் புரிவானை. (ருக)

இனிதுன்றெரிசன மெனவந்தடியினை யெதிர்வீழா
முனிபுங்கவனை நனிநம்பினமென மொழிவார்முன்

புனிதன்சிவமுனைர் விழிகொண்டனையவர் புரிபாவந்
தனையுந்தெரிபவ னருடந்தெதிர்மொழி தருவானுல (ருஉ)

வேறு

ஓவருங்கொடியபாவ முழந்துடனமெகுநீவி
ரிவாவருஞ்சுறுகாணுமகட் கினியணித்ததனுற்றேவா
தேவரும்பொதுவினுடல தெரிசிததீரொனையுங்கண்டா
மேவருங்களிப்பான்முன்செய வெம்பவம்விளமபிததீர்வீா (ருந)

என்றுரைகொடெப்பவேந்த னிறைஞசிநின்றெஙகட்கிஙஙு
னன்றுனைவழங்கயாஞசெய நனமையுமுளவோவைய
குன்றுறழநெடியமாடக கொடிநகரவநதியாள்வேன்
றன்றகையழிநதுதேயுஞ சநதிரசேனனெனபோ. (ருச)

என்னுயிரமைச்சன்மற்றீங கிவன்பெயர்சுகுணன்யாககை
துன்னும்யௌவனததிறசெல்வத் தருக்கிறறுன்மதிமீக்கூர்நது
மன்னுயிர்வருததிவாழந்தேன் மறையவாபொருளகூட்டுண்டேன்
கன்னியரலகுற்காமக கடலிடைககவிழ்ந்துவீழந்தேன (ருரு)

நிதம்பகலிரவாய்நூறு நேரிழையவர்தோடோயந்து
மதம்படுவிலங்கினின்றேன் மற்றெலாநிற்கயான்செய்
கதம்புரிவினையினென்று கழறுகேனொருநாட்டேவர்
பதந்தொடவுயர்ந்தசெம்பொன் படர்நெடுஞசெயகுன்றேறி. (ருசு)

இருநதனனிவனேடுங்க னிருஞ்சிறைநேமிப்புட்கும்
வருநதுகாமுகர்ககுநததத மனநதொறும்பகிாநதுவைப்பான்
முருஙகெரிமேல்பாலவெற்பின் முகட்டிறசேணுறவளர்ததான்
றிருநதுவேளெனனமாலைச் செககர்வநதனையும்வேலை. (ருஎ

தேனிருந்தொழுகுஙகொவ்வைச் செஙகனிமணிவாய்கதெண்டை
மீனிருந்தொளிரும்வாட்கண் மிககவர்தெரிவைமைககாா
வானிருநதொளிருமின்னின் மருங்குறள்ளாடவநதா
ளானிருஙகொடியார்வைகு மவநதிநீணமறுகினம்ம. (ருஅ)

கணடனன்மதியைமோகக் கார்முகின்மறைப்பமேலாம்
பெணடனமுயங்கியின்பம் பெறவிவன்றன்னேடுந்த
வணடிமிர்குழலாள்சென்ற மனைவயின்வெளவியென்பாற
கொணடணைமுனிவன்சீறிற் கோறியென்றுரைத்துவிட்டேன். ()

சொற்படிமுனிவன்சென்னி துணித்தவட்கொணர்ந்தான்மானக
கறபடிபெயராமின்னைக கரத்திலணைக்குமுன்ன

ரற்படிகிறத்திற்சிறி யடர்ந்ததுபிரமபாவ
நற்படிவலஞ்செய்குற்றேம் விடாதுபினலிவதைய. (சுo)

நெய்யடைகனலிற்சிறி நெருக்கியபழிக்குளெய்த்தேஙு
கையடையாஙகளெம்மைக் காப்பதுங்கடமையென்றூர்
மெய்யடைநீற்றுவேணி மெய்த்தமிழ்முனிவன்பாவ
மையடையுளத்தீரஞ்ச லஞ்சலென்றருளிமாதோ. (சுக)

படவரவேணிகாட்டும் பதிநதிவடபாற்றேன்று
மிடவபுரேசன்பாத மிருகடிகைப்போதுன்னி
யுடல்புளகுதிப்பககணணீ ரூற்றிருந்தொழுகவாஙகவ்
வடலரசனைப்பார்ததன்பி னருள்சுரந்துரைப்பதானுன் (சுஉ)

கனிநறுஞ்சுவைததேன்கைப்பக கற்றுளோர்கனிப்பமேனுட்
பனிவரைமுகட்டிலென்பாற் பரஞ்சுடருபதேசித்த
புனிதநற்றமிழ்சேர்சங்கம் பொலிநகர்வடபால்வையக
கினிதணித்துறையுங்காட்சி யிடவபுரப்பேர்மூதூர். (சுந)

ஏயவந்நகரினன்ன விநோதனுமிலிங்கமூர்ததிக
காயதென்றிசையினநதி யடிகள்பேர்த்தீர்த்தமுணடான
மேயவத்தீர்த்தமூழ்கி விறல்வடுகேசன்றீர்ந்து
போயினன்பிரமபாவம் பூருவமெனவுங்கேட்டாா (சுச)

குறைமுகவூர்திக்கெய்துங கொடும்பழிவரவென்னிந்தத்
திறைதவழவாவிதோய்ந்து தீர்ந்ததெவ்வாறின்றெங்கட்
குறையெனச்சிறுவிதிப்பே ருடையவன்மகததிறசெந்தா
மறைமகனமரர்நாப்பண் வந்துமுன்பிருககுங்காலை (சுரு)

சராசரசடஙகடோறுந் தனித்தனிகலந்துநிற்கும்
பராபரன்விமலனெந்தை பசுபதிசிரங்கள்போலும்
விராவியசிரங்களைந்தும் விளங்கியதன்க்குமென்றுத
துராணவமடைந்துநின்ற னஃதுணர்சுருதிமூர்த்தி. (சுசு)

சினந்தலைமிர்ந்தசூலத் திகம்பரக்குமரற்கூவி
மனந்தலைமயங்குந்தண்பூ மகன்றலையைந்திலொன்றி
னனந்தலைவிளஙகுமெம்மை நகுதலையறுத்தியென்றெ
முனந்தலையறுத்தான்பாவ முடுகியதரன்பாற்போகி. (சுஎ)

ஐயவிப்பாவம்பாறும் வழியெனக்கருள்செயென்ன
வையையின்வடபாற்செங்கோல் வழுதிகாட்டிடவநாமச
செய்யநன்னகருண்டந்தத் திருநகர்தென்சாராக
வெய்துறுமிடவதீர்த்தம் விளங்குமூவுலகுமேத்த. (சுஅ)

அவ்விடைமடுவினுழ யரும்பவங்கழிந்துபின்ன
ரிவ்விடைநம்பாற்சேறி யெனப்படஇப்பழியினீங்கித்
தெவ்விடைமழுவலான்பாற் சென்றனன்காரிமேனு
ளுவ்விடையடைந்தந்நீர்தோய்ந் துறும்பழிகழிவிநீவி (சுசு)

அன்னகரிலிங்கமூர்த்தி யன்னவிளோதநாதன்
பொன்னடிவணங்கிவாழ்ந்து போற்றிநீடவந்தியென்னுஞ்
சென்னகரடைமினென்று செப்பலும்விடைகொணடேகி
மன்னவனமைச்சனோடும் வந்துகாவிரிநீர்மூழ்கா. (எ0)

வேறு.

எருதூர்திருவிடைமருதூருடையவ ரிருதாடொழுதடிகருதாரூா, பொருதூர்நகையிறையுறையூர்பலநெறி புகுவார்பரவினரொருநாவ ற், றருதூரிடைவளர்சடைபோனிறைபுனல் தழுவூாதிருவுருமுழுதூ ரும், விருதூர்கொடிவிடையவர்கான்மலர்சிர மிசைசூடினர்பழிவி னைதீர்வார். (எக)

வேறு.

விரிநதியணியரங்கமேல் விழிவளர்கரியசெங்கண்மால்
திருவடிமலர்பணிந்துநீ டிரிசிரகிரியிலெந்தைதாள்
பரவினர்பழிகழிந்தில்லார் பதிபலநெறிகடந்துபோ
யருள்பொழிவழுதிதென்றனு டதனைவிரைவினடைந்துளார். (எஉ)

வேறு.

செந்தமிழ்த்திரு நாட்டிடைவிரைந்துசெல்பவர்பூஞ்
சந்தனத்தட வரைமுனிதமக்குமுன்பிசைத்த
சுந்தரப்பெருந் திருநகர்விழியெதிர்தோன்ற
மந்தரப்புயத் தவர்தொழுதிம்மெனவருவார். (எங)

தடநகர்க்கயல் வரவரநிழலெனத்தழுவித்
தொடர்பெரும்பழி காறளர்ந்தயர்ந்துபின்றூங்கிப்
படர்திறத்தினை நோக்கினரிருவரும்பலகா
னடநவிற்றினர் பாடினர்மகிழ்ந்தனர்நடந்தா (எச)

தாணுமெய்த்திரு வாப்புடையவர்பெருந்தலத்தி
னேணிபுக்கனர் விலகெனத்தொடர்பழிகஇசைத்து
மாணுறத்தமை வம்மினென்றழைத்தெனவானங்
காணகர்க்கொடி நிமிர்ந்துபினுடங்குவகண்டார். (எரு)

நஞ்சமுண்டவா யருவருப்பறநனியமுது
பஞ்சநாண்மலர் முகத்தரற்கருணதிப்பாங்கர்

வஞ்சிபோன்மருங் குடையவர்முகமெனமலருங்
கஞ்சநாண்மலர்த் தடமுநந்தனங்களுங்கண்டார். (எசு)

உவந்தசிந்தையர் புரம்புகுந்திறையவருலாக்கொ
ணிவந்ததேர்விழா வீதியுமண்டபநிலையுஞ்
சிவந்தறுண்டமிழ்க் கழகமுமளகையான்செல்வங்
கவர்ந்துவைத்தன பலபொருட்டெருவுநேர்கண்டார (எஎ)

வட்டவெண்குடைச் சுகுணனுஞ்செந்தமிழ்மாறன்
மட்டுறுமலர்க் கொன்றையினர்கருமுன்மணற்சோ
றட்டவேதியற கன்பினுலியறறிமேலாட
விட்டகேதன மாளிகைவீதியுங்கண்டார் (எஅ)

பைந்தமிழ்த்திரு ஞானசம்பந்தர்தம்பனுவன்
மந்திரப்பதி கதிதினலமணர்பொய்மதம்போய
நந்தநற்சிவ சமயமேசயத்தம்பநாட்ட
வந்திருக்கும்வை திகதிருமாமடங்கண்டார். (எகூ)

தெளித்தசெம்மணி வெயில்விடத்தருவின்மென்சினைக
டளிர்த்ததொத்தலி லரம்பையர்பாசிலைதனைத்தேன்
றுளித்தபூவுடன் முறியெனக்கொய்துறச்சுரர்கண
களித்துநோககியுண ணகப்புரிமாடங்கள்கண்டார். (அ0)

விரும்புமேனிலை யிருந்துதம்மென்குழற்காளைச்
சுரும்புதன்பெடை யெனத்தொடர்நதெயத்திடமீப்போ
யரும்புகற்பகப் பொதும்பர்புக்களியினின்றுடக
கரும்பனுர்பரு மணிக்கழுங்காவெகண்டார். (அக)

விழித்தபார்வைக ளிமைப்பறத்தஞ்செயல்வெறுததுப்
பழித்தவானர மடந்தையரதிசயம்படவா
னுழித்தவாதுயர் மேடைமேலம்மனையுறைகள்
கழித்தவாளன கண்ணிஞராவெகணடார். (அஉ)

இன்னதாயநன் னகர்வளங்கண்டுகண்டேகி
நன்னர்மாதவர் மறையவரருச்சனைநவில்வோர்
பன்னகாபரணன் புகழ்விரிப்பவர்பாஙகர்
மன்னுமால்விடை மடிவிடைப்போயெதிர்வணங்கி. (அங)

எறிந்ததெண்டிரை வாவியின்படித்துறையிழிந்தங்
கறிந்தசஙகற்ப விதிமுறையமைச்சரோடாடிப்
பிறிந்திலாக்கொடும் பழிபிதிந்தகமுறப்பிணித்துச்
செறிந்தமாசற விளங்கினன்சந்திரசேனன். (அச)

வெருவரும்பணி வாயுமிழ்சுடரொனவிளங்கு
மிருவருஞ்சின கரிமடைந்திடவபுரேச
ஞெருவருங்குர வங்கமழ்குழலுமைபாகன்
பொருவருஞ்சரண பணிந்தனர்வேந்திவைபுகலும் (அரு)

தேவதேவநி ராமயதுரியவதீத
மூவராகிமற் றிருவராமொருமுழுமுதல்வ
பாவகாரிய ருளம்புகாவாதியெம்பரம
தாவுமால்விடைக் கீலகநாயகசரணம் (அசு)

நாதபன்னக பூடணசுடர்த்திரிநயன
வேதமன்னவி பூதிமேனியவிளங்ககில
பூதமன்னவ நூபுரமறைசசரணமபு
சாதவன்னவி ஞேதமெய்ப்பாஞ்சுடர்சரணம (அஎ)

அந்தகாரிகங காதரதிரிபுரமரிதத
மந்தகாசவெண கயிலைமாலவனைச்சிகாமணியா
மிந்துசேகர நீலகந்தரவெமக்கிறைவ
சநதநான்மறை யாபபனூாததனிமுதலசரணம். (அஅ)

பருமவாளர வல்குலார்மயறபடுகுழிவீழ
கருமனென்பெரும் பழிதெறககலங்கவுருழந்தேன்
றெருமராவகையருள சுரந்தருணிமிாதிமிலவெண்
டருமமால்விடை யூாதிகழ்பசுபதிசரணம். (அகூ)

எனனவேத்திநின றிறைஞ்சலுமிருசெவிக்கினிபபச
சொன்னதோத்திரத் திறையவன்மனங்களிதூங்கி
நன்னர்மாககக னத்திடைவாணியினலஙகூா
மன்னகேட்டியென் றவனெதிரிமமொழிவழஙகும் (கூ0)

சினகருறும்பெறிந திலங்குவேறசந்திரசேனு
வுனகருமந்திரி தனக்கும்வன்பழிதொலைவுறற
தெனகருவிததிரு காஞ்சிரமேற்றிநின் றிறைஞ்சி
யனகுழாம்படர் தடம்பணையவந்திசென் றடைந்தாா. (கூக)

அடைந்தரசிய லமைச்சியலறந்தெரிந்தாறறி
நடந்துநாள்கழீ இப்பின்னர்முன்விடைபபெயர்நளிநீா
குடைந்தபுணணிய மானமீதிவர்ந்திமகுன்ற
மடந்தைபாகர்தங் கயிலைப்புக்கிருந்தனர்மாதோ (கூஉ)

வேறு

தொடரவந்திபுரந்தருள்சநதிரசேனன் சுகுணமந்திரியென்றிவர்
தெண்டிரைாதரவுங், கடவுணதியிலஞ்சிபடிந்துபின்மேவுங் கடிய

